காவேரீலஹரிகரோபலால்யமாநः = குழந்தையானது தாயின் கையினாலே சீராட்டி வளர்க்கப்படும்; இங்கே கடற்குழந்தையாகச் சொல்லப்படுகிற ஸ்ரீரங்கநாதனும் "திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி திரக்கையா லடிவருடப்பள்ளிகொள்ளுங் கருமணியை" என்கிறபடியே திருக்காவிரியின் அலைகளாகிற கைகளாலே உபசரிக்கப்படுகின்றான். காவேரியானவள் கடற்குழந்தைக்குத் தாய்முறையாவதும் அறிக. (ஸரித்பதியாகிய கடலுக்குக் காவேரி பத்நியாய், கடல்குட்டிக்கு மாதாவாகிறாள்.)

குழந்தை படுத்தவண்ணமாகவே யிருப்பது இயல்வாதலால் அதனையுந் திருவுள்ளம்பற்றி "ஸ்ரீரங்கேசயः" என்றார். இந்த ஸ்வாரஸ்யத்தை உணராமல் சிலர் "ஸ்ரீரங்கேச்வரः" என்று பாடங் கொள்வது தகாதென்க.

ஸ்ரீமத் வேதாந்ததேசிகனும் இந்த ச்லோகத்தைத் திருவுள்ளம்பற்றியே அபீதிஸ்தவத்தில் *ஜலதிடிம்படம்பஸ்ப்ருசः* என்றருளிச் செய்தார். ... (81)

सिञ्चेदिमं च जनमिन्दिरया तटित्वान् भूषामणिद्युतिभिरिन्द्रधनुर्दधानः ।
श्रीरङ्गधामनि दयारसनिर्भरत्वादद्रौ शयालुरिव शीतलकालमेघः ॥८२॥

ஸிஞ்சேதிமஞ்ச ஜநமிந்திரயா தடித்வாந் பூஷாமணித்யுதிபிரிந்த்ரதநுர் ததாநः,
ஸ்ரீரங்கதாமநி தயாரஸநிர்ப்பரத்வாத் அத்ரௌ சயாலுரிவ சீதலகாளமேகः. 82

| | | | |
|---|---|---|---|
| இந்திரயா தடித்வாந் | பிராட்டியாகிற மின்னலை யுடைத்தாய் | ஸ்ரீரங்கதாமநி | திருவரங்கம் பெரியகோயிலாகிற |
| பூஷாமணித்யுதிபி: | திருவாபரணங்களி லிழைத்த ரத்நங்களின் கிரணங்களாகிற | அத்ரௌ | மலையில் |
| இந்த்ர தநு: | இந்திரன் வில்லை | சயாளு: | படுத்துக்கொண்டிருப்பதான |
| ததாந: | வஹித்துக்கொண்டிருப்பதாய் | சீதல காலமேக: இவ | குளிர்ந்த கருமுகில்போன்றுள்ள ஸ்ரீரங்கநாதன் |
| தயாரஸ நிர்ப்பரத்வாத் | க்ருபையாகிற தீர்த்தத்தின் பூர்த்தியினால் | இமம் ஜநம் ச | அடியேனையும் |
| | | ஸிஞ்சேத் | அபிஷேகம் பண்ணியருள்க. |

* * *—பெரியபெருமாளைக் கடல்குட்டியாக உருவகப்படுத்திப்பேசினார் கீழ் ச்லோகத்தில். கடல்குட்டியைக் காண்பதனால் கண்கள் மாத்திரமேயன்றோ குளிரும்; அவ்வளவோடு த்ருப்திபெற முடியுமோ? எல்லா அவயவங்களும் குளிரவேணுமென்று பாரித்திருப்பவரிறே இவ்வாசிரியர். ஆகவே, பெரியபெருமாளை சீதல காளமேகமாகப் பேசவேணுமென்று திருவுள்ளம்பற்றி அங்ஙனே ஸாவயவரூபகவிந்யாஸம் பண்ணுவதாம் இந்த ச்லோகம்.

காளமேகமானது மின்னலோடும் இந்திரதநுஸ்ஸோடும் கூடியிருக்கும்; ஜலத்தினால் பூர்ண கர்ப்பங் கொண்டு அசையமாட்டாமல் மலையுச்சியிலே படுத்திருக்கும்; இத்தன்மைகள் ஸ்ரீரங்கநாதனுக்கும் ஒக்குமென்று அடைவே நிரூபிக்கிறார். மின்னற்கொடி போன்ற பிராட்டி உறையப் பெற்றிருப்பதும், திருவாபரணங்களிலிழைத்த பலவகை ரத்நங்களின் புகராகிற இந்த்ர தநுஸ்ஸையுடைத்தாயிருப்பதும், கருணாரஸம் நிரம்பியிருப்பதனால் ஸ்தாவரப்ரதிஷ்டையாக ஸ்ரீரங்கமந்திரத்தே போந்து சயநித்திருப்பதும் இந்த ஸ்ரீரங்கநாதகாளமேகத்தின் தன்மைகளாம். இப்படிப்பட்ட காளமேகம் அடியேன் மீதும் கருணாரஸத்தைக் கனக்க வர்ஷித்துக் குளிரச் செய்தருள்க வென்றாராயிற்று.

[இமஞ்ச ஜநம் ஸிஞ்சேத்] மேட்டு நிலம் பள்ளநிலம் என்னும் வாசிபாராதே வர்ஷிக்குமிறே மேகம்; அடியேனிடத்திலுள்ள தாழ்வுகளைக் கணிசியாதே அருள்புரிய வேணுமென்கை. இது சகாரத்தினால் தேறுங்கருத்து. .... ... ... (82)

आमौलिरत्नमकरात्पुनरा च पद्भ्यां धामक्रमोन्नमदुदारमनोहराङ्गम् ।
श्रीरङ्गशेषशयनं नयनैः पिबामः पश्यन्मनःप्रवणमोघमिवामृतस्य ॥८३॥

ஆமௌலிரத்நமகராத் புநரா ச பத்ப்யாம் தாமக்ரமோந்நமதுதாரமநோஹராங்கம்,
ஸ்ரீரங்கசேஷசயநம் நயநைஃ பிபாமஃ பச்யந்மநஃப்ரவணமோகமிவாம்ருதஸ்ய. 83

| | | | |
|---|---|---|---|
| ஆ மௌலி ரத்ந மகராத் | திருமுடியி லழுத்தின ரத்ந மயமான மகரம் முதற்கொண்டு | ஸ்ரீரங்க சேஷ சயநம் | திருவரங்கத்தில் அரவணை மேற் பள்ளிகொண்டருளும் பெரியபெருமாளை, |
| ஆ ச பத்ப்யாம் | திருவடிவரையில் | பச்யத் மந: ப்ரவணம் | ஸேவிப்பவர்களின் மனத்திலே வந்து தேங்குகின்ற |
| தாம க்ரம உந்நமத் உதார மநோஹர அங்கம் | தேஜோவிசேஷத்தாலே உயர்ந்து உதாரமாய் ரமணீயமான அவயவங்களையுடையரான | அம்ருதஸ்ய ஓகம் இவ | அமுதவெள்ளத்தைப்போலே |
| | | நயநை: | கண்களாலே |
| | | பிபாம: | பருகுகின்றோம். |

* * * பெரிய பெருமாளை அமுத வெள்ளமாக அநுபவிக்கிறார் இதில். இவ்வம்ருத ப்ரவாஹத்தைக் கண்களால் பருகுவோ மென்கிறார். திருமுடி தொடங்கித் திருவடியளவுள்ள ஒவ்வோரவயவத்திலும் தேஜஃபுஞ்ஜம் புறவெள்ள மிடுகையாலே எல்லா அவயவங்களும் சிறப்புற்றோங்கி விளங்குகின்றன வென்கிறார் பூர்வார்த்தத்தால்.

[பச்யந்மநஃப்ரவணம்] உலகத்திலுள்ள ப்ரவாஹங்களிற் காட்டிலும் விலக்ஷணமிறே இவ்வமுதவெள்ளம்; ஸேவிப்பவருடைய நெஞ்சிலேவந்து பாயும் அமுதமாமிது; "அணியரங்கனென்னமுதினைக்கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்றவாறு.

இதில் முதல் பாதத்தில் 'நிகராத்' என்றும் பாடங் காண்கிறதாம். கிரீடத்திலுள்ள ரத்நஸமூஹம் முதற்கொண்டு என்று பொருளாம். மேல் தொண்ணூற்றிரண்டாம் ச்லோகத்தில் * மாணிக்ய மகரீலஸத் ச்ருங்கம் * என்றிருப்பதோடு பொருந்துகின்ற 'மகராத்' என்ற பாடத்தில், திருவபிஷேகத்தில் ரத்நம் மகரவடிவாக இழைக்கப்பட்டிருக்கிற தென்கை. 'துராய்' என்கிற திருவாபரணத்தைச் சொல்லுகிற தென்பாருமுண்டு. ... ... ... ... (83)

अरविन्दितमङ्घ्रिपाणिवक्त्रैरपि तापिञ्छितमञ्चिताङ्गकान्त्या ।
अधरेण च बन्धुजीवितं श्रीः नियतं नन्दनयेत रङ्गचन्द्रम् ॥८४॥

அரவிந்திதமங்க்ரிபாணிவக்த்ரைஃ அபி தாபிஞ்சிதமஞ்சிதாங்ககாந்த்யா,
அதரேண ச பந்துஜீவிதம் ஸ்ரீஃ நியதம் நந்தநயேத ரங்கசந்த்ரம். 84

| | | | |
|---|---|---|---|
| அங்க்ரி பாணி வக்த்ரை: | திருவடிகள் திருக்கைகள் திருமுகம் ஆகிய இவற்றால் | அதரேண | திருவதரத்தினால் |
| அரவிந்திதம் | தாமரை பூத்திருக்கப்பெற்றும் | பந்துஜீவிதம் ச | பந்துஜீவ புஷ்பம் பூத்திருக்கப் பெற்று மிராநின்ற |
| அஞ்சித அங்க காந்த்யா | சிறந்த திருமேனி யொளியினால் | ரங்கசந்த்ரம் | பெரிய பெருமாளை |
| தாபிஞ்சிதம் அபி | பச்சிலை மரங்கள் பொருந்தப் பெற்றும் | ஸ்ரீ: | பெரிய பிராட்டியார் |
| | | நந்தநயேத நியதம் | நந்தவனமாகக் கொண்டு விஹரிப்பர் போலும். |

* * * பெரிய பெருமாளை அம்ருத ப்ரவாஹமாக அநுபவித்தார் கீழ் ச்லோகத்தில். [ந]தவனமாக அநுபவிக்கிறாரிதில். நந்தவனத்தில் நல்ல தாமரைமலர்களும் பச்சிலை[மர]ங்களும் பந்துஜீவ [உச்சித்திலக] புஷ்பங்களும் நிரம்பியிருக்கும்; அப்படி இங்[கில்லை]யோவென்னில்? அவை இங்கும் குறையற்றன வென்கிறார். திருவடிகள், திருமுகம்

இவைகளே தாமரைமலர்களாம்; பச்சைமாமலைபோல் மேனியின் புகர் பச்சிலைமரங்களாம்; பழுப்பேறின திருவதரம் பந்துஜீவபுஷ்பமாம். ஆக இவ்வகையாலே நந்தவனமென்னப் பொருத்தமுடைய பெரிய பெருமாள் பெரிய பிராட்டியாருடைய திருவிளையாட்டுக்குப் பாங்கு என்றாராயிற்று. 'நியதம்' என்கிற அவ்யயம் உத்ப்ரேக்ஷாஸூசகம்.()

अन्योन्यरञ्जकरुचोऽनुपमानशोभाः दिव्यस्रगम्बरपरिष्करणाङ्गरागाः ।

संस्पर्शतः पुलकिता इव चिन्मयत्वाद्रङ्गेन्दुकान्तिमधिकामुपबृंहयन्ति ॥८५॥

அந்யோந்யரஞ்ஜகருசோநுபமாநசோபாः திவ்யஸ்ரகம்பரபரிஷ்கரணாங்கராகாः,
ஸம்ஸ்பர்சதः புலகிதா இவ சிந்மயத்வாத் ரங்கேந்துகாந்திமதிகாமுபப்ரும்ஹயந்தி. 85

| | | | |
|---|---|---|---|
| அந்யோந்ய ரஞ்ஜக ருச: | ஒன்றுக்கொன்று சோபையை விளக்கின்ற காந்தியையுடையவைகளாய் | சித்-மயத்வாத் | ஸ்வயம் சேதநஸ்வரூபமாகையாலே |
| அநுபமாந சோபா: | ஒப்பற்ற ஒளியையுடையவைகளான | ஸம்ஸ்பர்சத: | திருமேனி ஸம்பந்தத்தினுல் |
| திவ்ய ஸ்ரக்— | வைஜயந்தீ மாலையென்ன | புலகிதா: இவ | மயிர்க்கூச்செறியப் பெற்றவை போன்று |
| அம்பர— | பீதாம்பரமென்ன | அதிகாம் | அதிகமான |
| பரிஷ்கரண— | திருவாபரணங்களென்ன | ரங்கேந்து காந்திம் | பெரிய பெருமாளுடைய சோபையை |
| அங்கராகா: | சாத்துப்படியென்ன இவைகள் | உபப்ரும்ஹயந்தி | பின்னையும் அதிகப்படுத்துகின்றன. |

* * *—பெரியபெருமாளுக்கு இயற்கையாகவே அளவற்ற காந்தி இருந்தாலும், வனமாலை திருப்பீதாம்பரம் திருவாபரணம் முதலியவற்றுல் இன்னமும அதிகமாகச் செய்யப்படுகிறது அந்தத்திருமேனியின் திவ்யதேஜஸ்ஸூ என்கிருர்.

[அந்யோந்யரஞ்ஜகருசः] பீதாம்பரத்தின் சோபையினுல் வனமாலைக்கு சோபாவிசேஷம்; வநமாலையின் சோபையினுல் பீதாம்பரத்துக்கு சோபாவிசேஷம் என்றிப்படி ஒவ்வொன்றும் பரஸ்பர சோபாதிசய ஹேதுவாயிருக்கிறபடி. *ஸ்ரக்வஸ்த்ராபரணைர் யுக்தம் ஸ்வாநுரூபைரநூபமைः, சிந்மயைஸ் ஸ்வப்ரகாசைச்ச அந்யோந்யருசிரஞ்ஜகைः * என்கிற பௌஷ்கரப்ரமாணத்தைத் திருவுள்ளம்பற்றி இந்தச்லோக மருளிச்செய்யப்படுகிறது. அங்குள்ள விசேஷணங்களே பெரும்பாலுமிங்குள்ளன.

[சிந்மயத்வாத் ஸம்ஸ்பர்சதः புலகிதா இவ] கீழெடுத்த பிரமாணத்தின்படியே திருப்பீதாம்பரம் முதலியவை யெல்லாம் சைதந்யசாலிகளாகையாலே பெரியபெருமாளுடைய திருமேனியோடுண்டான ஸம்ஸர்க்கத்தினுல் ரோமாஞ்சிதங்களாயினவோ! என்னும்படியா யிருக்கும். அதாவதென்னென்னில்; இத்திருமேனியிலுள்ள பீதாம்பர வநமாலாதி வஸ்துக்களே வேருரிடத்தில் இருக்குமாகில் இத்தனை புகர் பெறமாட்டா; இத்திருமேனி யோட்டைச் சேர்த்தியினுலாயிற்று அவற்றுக்குப் புகர் விஞ்சிற்று என்கை.

[ரங்கேந்து காந்திமதிகாமுபப்ரும்ஹயந்தி.] பெரிய பெருமாளுடைய திருமேனியின் ஸ்பர்சத்தாலே இவற்றுக்குப் புகர் விஞ்சுகிறது; இவற்றின் சேர்த்தியாலே திருமேனிக்குப் புகர் விஞ்சுகிறது என்றதாயிற்று. இத்திருமேனிக்கு இவைவேணும்; இவற்றுக்கும் இத்திருமேனியே அமையும் என்றபடி. ... ... (85)

द्रुतकनकजगिरिपरिमिलदुदधिप्रचलितलहरिवदहमहमिकया ।

स्नपयति जनमिममपहरति तमः फणिशयमरतकमणिकिरणगणः ॥८६॥

த்ருதகநகஜகிரிபரிமிலதுததி ப்ரசலிதலஹரிவதஹமஹமிகயா,
ஸ்நபயதி ஜநமிமமபஹரதி தமः புணிசயமரதகமணிகிரணகணः. 86

# ஆத்மதத்வ விவேசனம்

## ஆத்மாவின் ஜ்ஞாநாச்ரயத்வம்.

'ஜ்ஞானமே ஆத்மா' என்றும் 'ஜ்ஞானத்துக்கு ஆச்ரயம் ஆத்மா' என்றும் உபநிஷத்து முதலிய பிரமாணங்களினால் அறிகின்றோம். ஜ்ஞானமே ஆத்மா என்பதைப்பற்றிப் பிறகு பேசுவோம்; ஜ்ஞானத்துக்கு ஆச்ரயம் ஆத்மா என்பதைப் பற்றி இப்போது நிரூபணம் செய்வோம். ஆத்மா ஜ்ஞானத்திற்கு இருப்பிடமாயிருக்கும். தீபமும் அதன் ஒளியுமாகிய இரண்டும் தேஜோத்ரவ்யமாயிருக்கச் செய்தேயும் தீபமானது ஒளிக்கு ஆச்ரயமாயிருப்பது போல, ஆத்மாதானும் ஜ்ஞான ஸ்வரூபனாயிருக்கச் செய்தே தன்னுடைய தருமமான ஞானத்திற்குத் தன்னை யொழியத் தனிப்பட்டிருத்தலாவது தனிப்பட்டுத் தோன்றுதலாவது இல்லாதபடி தான் ஆதாரமாயிருத்தலே ஜ்ஞாநாச்ரயத்வமாகும். * விஜ்ஞாதாரமரேகேந விஜாநீயாத் * **ஜாநாத்யேவாயம் புருஷ : *** என்பது முதலான பிரமாணங்களினால் ஆத்மா ஜ்ஞாநாச்ரய பூதனென்பது திண்ணமாக அறியப்படும்.

## ஆத்மா ஜ்ஞாந மாத்ரமே யல்லன்

பௌத்தர் முதலான சில புறமதத்தவர்கள் இப்படி ஆத்மா ஜ்ஞாநாச்ரய பூதன் என்பதை இசையாதே ஜ்ஞான மாத்ரமென்று சொல்லுவதுண்டு; அது பிசகு. ஆத்மாவுக்கு ஜ்ஞாநாச்ரயத்வமன்றிக்கே கேவலம் ஞானமாயிருக்குமதுவே யுள்ளதாகில் "நான் இத்தை யறியா நின்றேன்" என்று உலகத்தில் ஸர்வ ஸம்ப்ரதிபந்நமாகக் காண்கிற வ்யவஹாரம் அஸங்கதமாக வேண்டிவரும். "நான் அறிவு" என்று தன்னை ஜ்ஞாநமாத்ரமாகவன்றோ சொல்லிக் கொள்ள வேண்டும்; இப்படிப்பட்ட வ்யவஹாரம் ஒரு வ்யக்தியினிடத்தும் காண்பதில்லை. "இவ்வர்த்தத்தை நானறியா நின்றேன்" "இவ்விஷயத்தை நான் அறிந்து கொண்டேன்" என்றிப்படியே வ்யவஹாரங்கள் எங்கும் காண்கையாலே, விஷயத்தை க்ரஹிப்பதானதொரு ஜ்ஞானத்திற்குத் தான் ஆச்ரயமென்னுமிடம் நன்கு தெரிகின்றதன்றோ. இப்படி ஆத்மாவினுடைய ஜ்ஞாத்ருத்வம் ப்ரத்யக்ஷஸித்தமாகையாலே கண்ணழிவற்றதென்று கொள்ளக் கடவது. * **அஹமிதமபிவேத்மீதி ஆத்ம வித்யோர் விபேதே ஸ்புரதி யதி ததைக்யம் பாஹ்யமப்யேகமஸ்து** * (ஸ்ரீ ரங்கராஜஸ்தவம்) என்கிற பட்டர் ஸ்ரீ ஸூக்தியும் இங்கு அநுஸந்தேயம்.

ஆத்மாவை ஜ்ஞாதா வென்று தெரிந்து கொண்டபோதே கர்த்தா வென்றும் போக்தா வென்றும் தெரிந்து கொள்ள வேணும். இன்னது ஹேயம், இன்னது உபாதேயம் என்கிற ப்ரதிபத்திக்கு ஜ்ஞாத்ருத்வமானது ஹேதுவாயிருக்குமாகையாலே, ஹேயங்களை விடுகையிலும் உபாதேயங்களைப் பற்றுகையிலும் சிகீர்ஷை யுண்டாகி அதடியாகக் கர்த்ருத்வ முண்டாகிறது. எவன் ஒரு கார்யத்தைச் செய்கிறானோ அவன் அதனாலுண்டாகும் பலனை அநுபவிப்பவனுமாகிறான். ஆகவே கர்த்தாவான போதே போக்தாவாகிறான். ஆனபின்பு ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம் சொன்னது கர்த்ருத்வ போக்த்ருத்வங்களும் சொன்னபடியாகக் குறையில்லை.

## கர்த்ருத்வம் ப்ரக்ருதிக்கன்று, ஆத்மாவுக்கே

இப்படி ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமா யிருந்துள்ள கர்த்ருத்வத்தை ஸாங்க்யர்கள் ப்ரக்ருதிக்கே உள்ளதாகக் கொள்ளுகின்றார்கள்; பகவத் கீதையில் * **கார்ய காரண கர்த்ருத்வே ஹேது : ப்ரக்ருதிருச்யதே, புருஷஸ் ஸுகது:க்காநாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே** * என்று

சொல்லுகையாலே ' கர்த்ருத்வ முள்ளது ப்ரக்ருதிக்கே, ஆத்மாவுக்கு கர்த்ருத்வமன்றிக்கே போக்த்ருத்வமே யுள்ளது ' என்று ஸாங்க்யர்கள் நிரூபிக்கிறார்கள். அது பிசகு. ப்ரக்ருதிக்கே கர்த்ருத்வமாய் ஆத்மாவுக்கு அஃதில்லையாகில் ஆத்மாவுக்கு சாஸ்த்ரவச்யத்வமும் போக்த்ருத்வமும் குலைந்ததாகும். சாஸ்த்ர வச்யத்வமாவது—விதி நிஷேத ரூபமான சாஸ்த்ரத்துக்குத் தான் அதிகாரியாய்க் கொண்டு அதின் வசத்திலே நடக்க வேண்டுகையாம். இதைச்செய், இதைச் செய்யாதே என்று சாஸ்த்ரங்களானவை பலவற்றை விதித்தும் பலவற்றை மறுத்தும் கூறியிருக்கின்றன. இந்த விதி நிஷேதங்கள் சேதநனைப் பற்றியே யல்லது ப்ரக்ருதியைப் பற்றியல்ல. ப்ரக்ருதிக்கே தான் கர்த்ருத்வ மென்னில் சாஸ்த்ரங்களிற் காணும் விதி நிஷேதங்கள் ப்ரக்ருதியை நோக்கியவை என்னவேணும். ஆகவே சாஸ்த்ரவச்யத்வம் சேதநனுக்குக் குலைந்ததாகும். அன்றியும், விஹிதங்களைச் செய்து நிஷித்தங்களை விலக்கி வர்த்திக்கின்ற சேதநன் நல்ல பலன்களை யனுபவிக்கையும், விஹிதங்களை விட்டு நிஷித்தங்களைச் செய்து திரியும் சேதநன் தீய பலன்களை யனுபவிக்கையும் ஸர்வஸம்ப்ரதிபந்நமாயிருக்கின்றது; இப்படிப் பட்ட ஸுக துக்க ரூப பல போக்த்ருத்வமும் சேராமற் போகும். கிம் பஹுநா? சேதநன் கர்த்தாவாகாத போது சாஸ்த்ரமே வீண் என்ன வேண்டி வரும்.

* ஸ்வர்க்க காமோ யஜேத * என்றும் *'முமுக்ஷு: ப்ரஹ்ம உபாஸீத * என்றும் பல பல வகையான விதிகளைக் காணுகின்றோம். ஸ்வர்க்கம் மோக்ஷம் முதலான பலன்களை எந்த சேதநன் அநுபவிக்க வேண்டியவனோ அவனையே யன்றோ கர்த்தாவாக சாஸ்த்ரம் நியோகிக்கிறது. ஆகவே பலனை புஜிப்பவனே கர்த்தாவாக வேணுமென்பது புநருக்தம். அசேதநத்துக்குக் கர்த்ருத்வமாகில் சேதநனைக் குறித்து விதிக்கவே கூடாது. சாஸநம் பண்ணுவது எதுவோ அதற்கு சாஸ்த்ரம் என்று பெயர். சாஸநமாவது ப்ரவர்த்தனம். சாஸ்த்ரம் ப்ரவர்த்தனம் பண்ணுவதாவது அறிவை யுண்டு பண்ணும் முகத்தாலேயாம். அசேதநமான ப்ரக்ருதிக்கு அறிவை யுண்டு பண்ண முடியாதன்றோ. ஆகவே சாஸ்த்ரம் ஸார்த்தகமாக வேணுமானல் போக்தாவான சேதநனுக்கே கர்த்ருத்வமாக வேணும். இவ்விஷய மெல்லாம் * கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத் * என்கிற ஸூத்ரத்தினுலும் விசதம்.

## கர்த்ருத்வத்தின் விசேஷ விவரணம்

எல்லாவகையான கர்த்ருத்வமும் சேதநனுக்கு ஸ்வரூப ப்ரயுக்த மென்று நினைக்க வேண்டா; சோறுண்ணுதல், தண்ணீர் குடித்தல், ஸ்த்ரீகளை புஜித்தல் முதலிய போகங்களை யுத்தேசித்துப் பண்ணும் ஸ்வ வ்யாபாரங்களில் கர்த்ருத்வம் ஔபாதிகமாகையாலே ஸ்வரூப ப்ரயுக்த மன்று; ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களாகிற குணங்களினுடைய ஸம்ஸர்க்கத்தாலே யுண்டானது. இவ்வர்த்தம் * ப்ரக்ருதே: க்ரியமாணாநி குணை: கர்மாணி ஸர்வச:, அஹங்கார விமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே என்கிற கீதாச்லோகத்தினல் விசதம்.

ஆக இவ்வளவும் ஸாங்க்யர்களின் பக்ஷத்தை நிராகரித்து ஆத்மாவுக்கே கர்த்ருத்வமுள்ளதென்று ஸாதிக்கப் பட்டது. இனி இந்த கர்த்ருத்வமானது ஸ்வாதீநமா? பராதீநமா? என்கிற சங்கையிலே சொல்ல வேண்டியவற்றைச் சொல்லுகிறோம்.

## ஆத்மாவின் கர்த்ருத்வம் ஈச்வராதீநம்

சாஸ்த்ரம் அர்த்தவத்தாக வேண்டியதற்காக கர்த்ருத்வம் ஆத்ம தர்மமென்று கொள்ள வேணும். அந்த கர்த்தாவுக்கு தர்மமான ஜ்ஞானம், இச்சை, ப்ரயத்நம் ஆகிறவிவை பகவானுக்கு அதீநங்களாயிருக்கை யாலும், பகவானுடைய அநுமதி யில்லாமல் அந்த ஞானம் முத

வியவை க்ரியா ஹேதுவாக மாட்டாமையாலும் இவனுடைய கர்த்ருத்வம் ஈச்வராதீந மென்று கொள்ளவேணும்.

இங்ஙனே கொண்டால் புண்ய பாபங்கள் ஈச்வரனுக்கேயாக வேண்டாவோ? சேதநனுக்கு ஆக இடமில்லையே! என்கிற சங்கை உதிக்கக் கூடும். "சேதநனுடைய புத்திமூலமான ப்ரயத்நத்தையபேக்ஷித்து ஈச்வரன் அநுமதி பண்ணுகையாலே அந்த க்ரியையைப் பற்றி வரும் புண்ய பாபங்களும் சேதநனுக்கேயாகின்றன" என்று நம் பூருவாசாரியர்கள் ஸமாதானம் அருளிச் செய்கின்றனர். ப்ரஹ்ம ஸூத்ரத்தில் ***பராத் து தத் ச்ருதே :*** என்கிற ஸூத்ரத்தினால் ஆத்மாவினுடைய கர்த்ருத்வம் பராயத்த மென்று சொல்லப் பட்டிருப்பதும் ***க்ருத ப்ரயத் நாபேக்ஷஸ் து விஹித ப்ரதிஷித்தா வையர்த்த்யாதிப்ய:*** என்ற ஸூத்ரத்தினால் சங்கா பரிஹாரம்செய்யப் பட்டிருப்பதும் குறிக் கொள்ளத் தக்கது. விதி நிஷேதங்கள் வீணாகாமைக்காக இச்சேதநன் பண்ணின ப்ரதமப்ரயத்நத்தையபேக்ஷித்துக் கொண்டு ஈச்வரன் ப்ரவர்த்திப்பிக்கு மென்றதாயிற்று.

இதைச் சிறிது விவரிக்கிறோம். எல்லா சேதநர்களுக்கும் ஜ்ஞாத்ருத்வம் இயல்பாகையாலே பொதுவாக ப்ரவ்ருத்தியிலும் நிவ்ருத்தியிலும் உரிமை தடையற்றிருக்கும். இத்தகைய உரிமையை நிர்வஹிக்கைக்காக ஈச்வரன் அந்தராத்மாவாய்க் கொண்டு நிற்பன். அவனாலே யுண்டாக்கப் பட்ட ஸ்வரூப சக்தியை யுடையனான சேதநன் அந்தந்த பதார்த்தங்களிலே ஜ்ஞாந சிகீர்ஷா ப்ரயத்நங்களை உண்டாக்கிக் கொண்டிருப்பன். அவ்விடத்தில் மத்யஸ்தனாகையாலே உதாஸீநரைப் போலே யிருக்கிற பரமாத்மாவானவன் அந்த சேதநனுடைய பூர்வ வாஸநாநுரூபமான ப்ரவ்ருத்தி நல்லதோ தீயதோ அதில் அநுமதியையும் அநாதரத்தையுமுடையனாய்க் கொண்டு, நல்லது செய்யுமளவில் அநுக்ரஹத்தையும், தீயது செய்யுமளவில் நிக்ரஹத்தையும் பண்ணா நிற்பானாய் ஸுக துக்கங்களை அவ்வோ சேதநர்களுக்கும் கொடா நிற்பன்.

நடாதூரம்மாள் அருளிச் செய்த தத்வஸார மென்னும் க்ரந்தத்தில் :—*** ஆதாவீச்வர தத்தயைவ புருஷ: ஸ்வாதந்த்ர்ய சக்த்யா ஸ்வயம் தத்தத்ஜ்ஞான சிகீர்ஷண ப்ரயதநாந்யுத்பாதயந் வர்த்ததே, தத்ரோபேக்ஷ்ய ததோநுமத்ய விதத தந்நிக்ரஹாநுக்ரஹௌ தத்தத் கர்மபலம் ப்ராயச்சதி தத: ஸர்வஸ்ய பும்ஸோ ஹரி: *** என்கிற ச்லோகத்தின் பொருள் இவ்விஷயத்தில் நன்கு தெளிவு பிறப்பிக்கும்.

(இதன் பொருள் வருமாறு :—ஸர்வ நியாமகனாய் ஸர்வாந்தராத்மாவான ஸர்வேச்வரன் ஆதியிலே தனக்கு உண்டாக்கிக் கொடுத்த ஜ்ஞாத்ருத்வ ரூபமான ஸ்வாதந்த்ர்ய சக்தியாலே சேதநன் தானே அவ்வோ விஷயங்களிலே ஜ்ஞாந சிகீர்ஷா ப்ரயத்நங்களைப் பண்ணிக் கொண்டிருப்பன் : அவ்விடத்தில் அசாஸ்த்ரீயங்களிலே உபேக்ஷித்தும் சாஸ்த்ரீயங்களிலே அநுமதி பண்ணியும் அவ்வோ விஷயங்களிலே நிக்ரஹாநுக்ரஹங்களைப் பண்ணா நின்றுகொண்டு அவ்வோ கர்மபலத்தையும் ஸர்வேச்வரன் கொடா நிற்பன் என்கை.)

## விசேஷ சங்கைக்குப் பரிஹாரம்

***ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி தம் யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதி, ஏஷ ஏவ அஸாது கர்ம காரயதி தம் யமதோ நிநீஷதி *** என்று ஓதப் பட்டிருக்கின்றது. இதன் பொருளாவது, எம்பெருமான் எந்த சேதநனை உயர் கதியை யடைவிக்க விரும்புகிறானோ அவனைக் கொண்டு நல்ல காரியங்களைச் செய்விக்கிறான். எந்த சேதநனை நீச கதியை யடைவிக்க விரும்புகிறானோ அவனைக் கொண்டு கெட்ட காரியங்களைச் செய்விக்கிறான்—என்பதாம் ;

ஆகவே நல்ல எண்ணத்தாலும் கெட்ட எண்ணத்தாலும் ஸர்வேச்வரன் தானே ஸாதுவாயும் அஸாதுவாயுமுள்ள கருமங்களைப் பண்ணுவியாநிற்கு மென்கிறவிது எங்ஙனே பொருந்து மென்று சங்கை உதிப்பதுண்டு. இதற்குப் பரிஹாரம் ஸ்ரீபாஷ்யகாரரே நிரூபித்தருளினர். மேலே காட்டின உபநிஷத்தின் விஷயம் ஸர்வஜநஸாதாரணமன்று. யாவனொருவன் பகவத் விஷயத்தில் மிக மிக அதிகமான ஆநுகூல்யத்திலே ஒருப்பட்டவனாய்க் கொண்டு ப்ரவர்த்திக் கின்றானோ, அவனை அநுக்ரஹியா நின்று கொண்டு பகவான் தானே தன்னைப் பெறுதற்கு ஸாதனங்களாயும் அதி கல்யாணங் களாயுமுள்ள கருமங்களிலே ருசியை ஜநிப்பிக்கிறா னென்றும், யாவனொருவன் மிக மிக ப்ராதிகூல்யத்திலே ஒருப்பட்டவனாய்க் கொண்டு ப்ரவர்த்திக்கின்றானோ அவனை ஸ்வப்ராப்தி விரோதிகளாயும் அதோகதி ஸாதனங்களாயுமுள்ள கருமங்களிலே ஸக்தனாக்குகிறானென்றும் அந்த உபநிஷத் வாக்யத்திற்குப் பொருளாம். ஆகவே பொருந்தாமை யொன்று மில்லை யென்பர்.

ஆன பின்பு தேசந ப்ரவ்ருத்தியில் எம்பெருமானுக்கு அநுமந்த்ருத்வமே ஸர்வஜந ஸாதாரணம்; ப்ரயோஜகத்வம் விசேஷ விஷயம் என்று கொள்ள வேணும்.

## ஆத்மாவை ஜ்ஞான மென்கைக்குக் காரணம்

ஆத்மா ஜ்ஞாநத்திற்கு ஆச்ரயமாயிருக்குமாகில் சாஸ்த்ரங்களில் இவனை 'ஜ்ஞாநம்' என்கிற சொல்லாலேயே சொல்லி யிருப்பது ஏன்? * **யோ விஜ்ஞாநே திஷ்டந்** * **விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே** * என்பது முதலான ச்ருதிகளில் கேவலம் விஜ்ஞானமென்றே ஆத்மாவைச் சொல்லியிருக்கிறதே; இது எதனாலே? என்னில்; ஜ்ஞானமானது ஸ்வாச்ரயத்திற்கு ஸ்வயம் ப்ரகாசகமாயிருப்பது போலே ஜ்ஞாந நிரபேக்ஷமாகத் தனக்குத் தானே ப்ரகாசிக்கையாலும், ஜ்ஞாநம் இவனுக்கு ஸாரமான குணமாகையாலே ஸ்வரூபாநுபந்தியாய் ஸ்வரூப நிரூபக தர்ம மாகையாலும் அங்ஙனே சொல்லிற்று. இவ்விஷயம் * **தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேச: ப்ராஜ்ஞவத்** * **யாவதாத்ம பாவித்வாச்ச ந தோஷஸ் தத்தர்சநாத்** * என்கிற இரண்டு ஸூத்ரங்க ளாலும் சொல்லப்பட்டுளது. "**ஜ்ஞாநமாத்ரவ்யபதேசஸ்து ஜ்ஞாநஸ்ய ப்ரதாந குணத்வாத் ஸ்வரூபாநுபந்தித்வேந ஸ்வரூப நிரூபக குணத்வாத், ஆத்ம ஸ்வரூபஸ்ய ஜ்ஞாநவத் ஸ்வப்ரகாசத் வாத் வா உபபத்யதே**" என்று வேதாந்த தீபத்திலே ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்ததும் இங்கே அநுஸந்தேயம்.


## மிகவும் அவசியமான அறிவிப்பு

எங்களிடம் வேலைபார்த்துவந்த T. B. ஆளவந்தார் ரவுத் என்கிற பாகவதர் வேலையில் நின்றும் விலகி மூன்று மாதங்களுக்கு மேலாயிற்று. அவர் சேலம் கரூர் மதுரை திருச்சி முதலான விடங்களில், நாம் கட்டளையிட்டனுப்பிய ஏஜண்டாகச் சொல்லிக்கொண்டு சந்தாபணமென்றும் அட்வான்ஸ் பணமென்றும் வசூல் செய்து கொண்டிருப்பதாகத் தெரிய வருகிறது. அவருக்கும் நம்முடைய ஆபீசுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லையென்பதையும், அவரிடம் செலுத்தும் தொகைக்கு யாரும் ஜவாப்தாரியல்ல என்பதையும் யாவரும் திடமாக அறியவேண்டியது. இந்த வஞ்சக கத்திற்கு யாரும் ஆளாகவேண்டாமென்றும் எச்சரிக்கை செய்யப்படுகிறது.

5-5-'50. மானேஜர்—ஸத்க்ரந்தப்ரகாசநஸபா.

# தெய்வச் செயலின் சிறப்பு

ஒரு மஹாநகரத்தில் ஒரு குடும்பம். அக்குடும்பத்தில் அருமையாகப் பிறந்துவளரும் புதல்வனுக்கு ஒருநாள் இரவில் மஹத்தான ஜ்வரபாதை உண்டாயிற்று. இரண்டு மைல் தூரத்தில் வைத்யசாலை இருந்தது. நோயின் தன்மையைச் சொல்லியனுப்பி மருந்து வரவழைக்கலாமென்று கருதிய பெரியார், தமது பன்னிரண்டு வயதுள்ள சிறுவன்கையில் ஒரு ஸீஸாவும் ஒரு ரூபாயும் மருந்து விவரம் குறிக்கும் சீட்டும் கொடுத்து டாக்டரிடம் மருந்து வாங்கிவரும்படி சொல்லி அச்சிறுவனை யனுப்பினர்.

அவன் கனவேகமாகச்சென்று டாக்டரிடம் சேர்ந்தான். அப்போது இரவு சுமார் ஒன்பதுமணி. மின்னலும் காற்றும் இடியுமாயிருந்தது. டாக்டர் மருந்துசாலையின் முன்னிலையில் உட்கார்ந்து சில ஆப்தர்களான பெரியமனிதர்களோடு பேசிக்கொண்டிருந்தார். அச்சமயம் இச்சிறுவன் சென்று செய்தியைத் தெரிவித்தும் அவர் அன்பர்களோடு வார்த்தையாடுதலில் மிக்க குதூஹலமாயிருந்ததனால் இச்சிறுவனது வேண்டுகோளைக் கணிசியாமலே யிருந்திட்டார்.

இவனும் சிறிது நிர்ப்பந்தித்துக் கூறவே, டாக்டர் ‘இப்போது முடியாது, காலை வா’ என்று அலக்ஷியமாகப் பேசினார். அதுகேட்ட சிறுவன் ‘ஐயா! நான் இரண்டுமைல் தூரத்திலிருந்து வந்திருக்கிறேன்; வீட்டில் அண்ணனுக்கு நோய் மிகக் கடினமானது; இப்போது வேறெங்கும் மருந்துகிடைப்பதும் அரிதாயிருக்கின்றது. இப்போதே தாங்கள் மருந்து தராவிடில் நாளை காலைவரையில் அண்ணன் ஜீவித்திருப்பானென்பதும் ஸந்தேஹமே; அன்றியும், நான் மருந்து வாங்கிக்கொண்டு போகாமல் வெறுங்கையோடு சென்றால் என் உயிர் தக்குவதும் கஷ்டமாகும், தாய்தந்தையர் என்னைப் புடைத்துவிடுவார்கள்; ஆதலால் மிகவும் தயவு செய்து பணம் பெற்றுக்கொண்டு மருந்து தரவேணுமென்று சொல்லி, மருந்தின் விவரம்காட்டும் சீட்டையும் ஸீஸாவையும் ரூபாயையும் மேஜையின் மேல் வைத்துக் கும்பிட்டான்.

இங்ஙனம் கெஞ்சி வணங்கிக் கேட்டதைக் கண்ட அங்குள்ள பெரியார்கள் மிகவும் மனமிரங்கி டாக்டருக்குச் சாலவும் சிபார்சு செய்தார்கள். மருந்து சீட்டைக்கண்ட டாக்டர் அது இரண்டு மூன்று தினுசுகள் சேர்த்துக் கலந்து கொடுக்கவேண்டிய மருந்தாக இருந்தபடியால் ஸ்வாரஸ்யமான வார்த்தையை விட்டு எழுந்திருந்து இது செய்துகொடுக்க மனங்கொள்ளாமலேயிருந்தார். ஆனாலும் சிறுவனுடைய கெஞ்சுதலுக்கு மிக இரங்கிய அன்பர்கள் அதிகமாகத் தூண்டவே வருந்தியெழுந்து அதில் ஊக்கமில்லாமலே மருந்துசீட்டை நன்றாகக் கவனியாமல் வேறு சிலமருந்துகளைக்கூட்டி ஸீஸாவில் கொட்டிக் கொடுத்தனுப்பிவிட்டார். சிறுவனும் மிக்க ஆனந்தத்தோடு அதைவாங்கிக் கொண்டு கனவேகமாகத் திரும்பினான்.

ஐந்துநிமிஷம் பொறுத்தபின் டாக்டருடைய கையில் வலிதான எரிச்சல் எடுத்தது. உடனே, எந்தமருந்துகளைக் கலந்து கொடுத்தோமென்று கவனிக்கத்தொடங்கினார். ஞாபகப் பிசகினால் அக்நித்ராவகமும் பாய்ஸனான மருந்து மற்றொன்றும் கலந்து கொடுக்கப்பட்டதாகத் திண்ணமாய்த் தெரிந்து கொண்டார். கொடுத்த அந்தமருந்து உட்கொள்ளப்படுமாகில் உடனே குடல் வெந்துபோய் பிராணாபாயம் நேருவது நிச்சயம். அந்தோ! இப்படிப்பட்ட

உயிர்க்கொலையான மருந்தைக்கொடுத்து விட்டோமே! சிறுவனே கனவேகமாகச் சென்று விட்டானே! இதுவரையில் மருந்து உபயோகப் படுத்தப்பட்டிருக்குமானால் உயிர்ச்சேதம் நேராமலிருக்கமுடியாதே, ஐயோ! கொலைபாதகனாக ஆய்விட்டேனே!, அந்தச்சிறுவன் இன்னான் இன்னவிடத்தான் என்றாவது தெரிந்தால் இப்போதே ஓடிப்போய் மருந்தை உட்கொள்ளாதபடி நிறுத்தலாம். இன்னதிக்கிலிருந்து அச்சிறுவன் வந்தானென்பதும் தெரிந்துகொள்ளாமற் போய்விட்டோமே. இரண்டுமைல் தூரத்திலிருந்து வந்ததாகச் சொன்னானேயல்லது இன்னவிடத்திலிருந்து வந்ததாக அவன் தெரிவிக்கவில்லையே! ஐயோ இந்த நள்ளிருளில் மின்னலும் இடியும் மழையுமான இச்சமயத்தில் எந்தப்பக்கம் ஓடி எந்தவிதமாக அச்சிறுவனைக் கண்டுபிடிக்க முடியும்? தெய்வமே! என்னை இப்படியும் கொடிய கொலைபாதகனாக ஆக்கிவிடலாமோ! என்று டாக்டர் துடிக்கிறார், தவிக்கிறார், துள்ளுகிறார், கதறுகிறார், அழுகிறார், அன்பர்கள் தேற்றகில்லாது தணறுகிறார். இவருடைய நிலைமை இதுவாயிருக்க;

மருந்து வாங்கிக்கொண்டு களிப்புடன் வேகமாகச்சென்றசிறுவனோ வென்றால் இருளில் மழையில் சென்றதனால் வழியில் கால்வழுக்கிக் கீழேவிழுந்து மருந்துஸீஸாவும் கீழே நழுவி உடைந்துபோக, மிகுந்த வருத்தத்துடன் அந்த டாக்டரிடமே திரும்பி வந்து 'ஐயா! என்கதி இப்படியாய்விட்டது; இந்தச்செய்தியைச் சொல்லிக்கொண்டு நான் வீட்டிற்குச் சென்றால் என் உயிரை வாங்கிவிடுவர்கள்; மறுபடியும் மருந்து வாங்கிக்கொள்ள என்கையில் ரூபாயுமில்லை; எப்படியாவது என்னைக்காப்பாற்ற வேண்டியது உங்கள் தருமம்; தயவுசெய்து அந்தமருந்தை மறுபடியும் கொடுத்தீர்களானால் எனது அண்ணனுடைய உயிர் பிழைப்பதற்கு முன் என்னுயிர் பிழைக்கும்' என்றுசொல்லி மன்றாடினான்.

இச்செய்தி கேட்டவுடனே டாக்டருக்குண்டான ஆனந்தத்திற்கு அளவுதான் இருக்குமோ? அச்சிறுவனைத் தலைமேல் தூக்கிக்கொண்டு கூத்தாடினார், குலாவினார். தெய்வத்தைப் போற்றினார், புகழ்ந்தார். இன்னு மென்னென்னவோ செய்தார். தெய்வபக்தி அதிகரிக்கப் பெற்றார். உடனிருந்த அன்பர்களைத்தழுவி எழுந்தும் பறந்தும் துள்ளிக்குதித்தார். உடனே அந்தச்சிறுவனைத் தமது மோட்டார்காரில் உட்காரவைத்துக்கொண்டு தமே நோயாளியின் வீட்டுக்கு நேரில்சென்று போதுமான சிகித்ஸையை இனமாகச்செய்து விரைவில் குணப்படுத்தினார்.

---

## விசேஷார்த்த விளக்கம்.

திருப்பாவையில் (3) * ஓங்கியுலகளந்த பாசுரத்திற்கும் (21) * ஏற்ற கலங்கள் பாசுரத்திற்கும் விசேஷார்த்தங்களை விளக்கவேணுமென்று சில பெரியாரிட்ட நியமனத்தைச் சிரஸாவஹித்து இந்த விசேஷார்த்த விளக்கம் வரையப்படுகின்றது. ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் * கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே * வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே * என்ற பாசுரங்களினால் வெளியிட்டருளின பரமார்த்தத்தைப் பண்டே விளக்கியிருக்கிறோம். அதற்கிணங்க, திருப்பாவையில் பாசுரந்தோறும் எம்பெருமான் பரமான பொருள் அந்யாபதேச ரீதியிலும் பாகவதோத்தமர்கள் ஆசார்யோத்தமர்கள் பரமான அர்த்தம் ஸ்வாபதேசரீதியிலும் அமைந்துள்ளனவென்பது மறக்கத் தக்க தன்று. அந்யாப

தேச ரீதியில் அறியக்கிடக்கும் பொருள்களை நமது திவ்யார்த்த தீபிகையுரையில் விவரித்துள்ளோம். ஸ்வாபதேசார்த்தமே இங்கு விவரிக்கப்படுகிறது.

[**ஓங்கியுலகளந்தவுத்தமன் பேர்பாடி**] * குரோர் நாம ஸதா ஜபேத் * என்கிறபடியே ஆசார்யனுடைய திருநாமத்தைப்பாடி யென்றபடி. ஓங்கியுலகளந்த வுத்தமன் ஆசார்யன்; எங்ஙனே யென்னில்; **ஓங்கி**–எம்பெருமானைக் காட்டிலும் மேம்பட்டு, **உலகளந்த**–உலகங்களை யெல்லாம்ஸ்வாதீனப்படுத்திக்கொண்ட, **உத்தமன்**–சிறந்தவன் என்று பதப்பொருள். ஆசாரியன் எம்பெருமானைக் காட்டிலும் மேம்பட்டவனென்பது இராமானுச நூற்றந்தாதியில் பல பாசுரங்களினால் காட்டப்பட்டுள்ளது; அவற்றுள், (41) * மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து * என்கிற பாசுரம் திலகமாயமைந்தது. எம்பெருமான் பல பல யோனிகளில் பல வகைப் பிறவிகள் பிறந்து கண்காண வந்து நின்று உபதேசாதிகளாலே ஸ்வஸ்வரூபத்தைக் காட்டிக் கொடுத்தவிடத்திலும் யாரும் அவனைப் பொருள் படுத்தவில்லை; ***அவஜாநந்தி மாம்** மூடா: * [மூடர்கள் என்னை அவமானப்படுத்துகிறார்கள்] என்று தானே சொல்லி வருந்த வேண்டியதாயிற்று. ஆகவே பகவானுடைய அவதாரம் பயன்பட்டிலது. ஆசார்ய ஸார்வ பௌமனுடைய திருவவதாரமோவென்னில் மிக்க பயன் பெற்றது. ஆசாரியன் பகவானைப் போலே 'என்னை வணங்கு, என்னையே தொழு'[1] என்று சொல்லித் தன் திருவடிகளைக் காட்டிக் கொடாதே * திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்துய்ம்மினோ * என்றும் * அஃதே உய்யப்புகுமாறு * என்றும் அவன் திருவடிகளையே தஞ்சமாகக் காட்டிக் கொடுத்த படியால் ஆசார்யனுடைய உபதேசம விரைவில் செவ்வனே பலித்ததாயிற்று. ஆகவே எம்பெருமானைவிட ஆசார்யன் உயர்ந்தவன். எம்பெருமான் தான் ராமக்ருஷ்ணதிருபேண அவதரித்த காலங்களில் வஸிஷ்ட ஸாந்தீபநிப்ரப்ருதிகளைத் தானும் ஆசாரியர்களாக வரித்திருந்த படியாலே இக்காரணத்தாலும் ஆசாரியன் ஓங்கின படி. கீதா சார்யன் * **தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா, உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந:** * என்று கீதையிலே தானே ஆசார்யன் பெருமையைச் சிறக்க எடுத்துரைத் திருப்பதனாலும் ஆசார்யனே ஓங்கினவனவன்.

[**உலகளந்த**] எம்பெருமான் தன்னுடைய பெருமையை மறைத்துக் கொண்டு சிறிய வடிவை யேற்றுக் கொண்டு அஸுரனிடத்திலே வந்து மூவடிநிலம் இரந்தது போல, ஆசாரியனும் தன்னுடைய பெருமையை யெல்லாம் மறைத்துக் கொண்டு மநுஷ்யஸஜாதீயனாய்ச் சிறுகப் பிறந்து ஆஸுரப்ரக்ருதிகளான ஸம்ஸாரிகளிடத்திலே வந்து 'ரஹஸ்யத்ரயம் கேளுங்கள், ஷட்கத்ரயம் கேளுங்கள், தத்வஹித புருஷார்த்தங்களைக் கேளுங்கள், சிதசிதீச்வரதத்வத்ரயம் கேளுங்கள்' என்றிப்படி மூன்றைப்பற்றியே இரப்பாளனாயிருப்பன். திரிவிக்கிரமன் ஸ்ரீபாததீர்த்த மளித்து உலகத்தை உய்வித்தது போல ஆசாரியனும் * **ததஸ் ஸ்வசரணம் போஜஸ்பர்ச ஸம்பந்ந ஸௌரபை:, பாவநைரர்த்திநஸ் தீர்த்தைர் பாவயந்தம் பஜாமி தம்** * என்று ஸ்ரீவரவர முநிதிநசர்யையிற் கூறின படியே ஸ்ரீபாத தீர்த்தம் ப்ரஸாதித்து சிஷ்யோஜ்ஜீவனம் செய்து போருகிறபடி.

[**உத்தமன்**] கர்மகாண்டமான வேதபாகங்களைப் போதித்து மத்யமாசார்யராகாமல், ச்ருங்காரரஸ ப்ரதானமான காவ்ய நாடகங்களைப் போதித்து அதமகுருவாகாமல், * புலையற்மாகிநின்ற புத்தொடு சமணமெல்லாம் கலையறக்கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோதான் * என்று திருமாலையில் இழித்துரைக்கப்பட்ட ஜைந பௌத்தாதிக்ரந்தங்களைப் போதித்து அதமாதமகுருவுமாகாமல் அத்யாத்மஸம்ப்ரதாய சாஸ்த்ரங்களைப் போதித்து உத்தமகுருவாமவர். அநுவ்ருத்திப்ரஸந்நாசார்யர்களாய்க் கொண்டு சிஷ்யர்களின் அநுவ்ருத்தி நிர்ப்பந்தங்கள்

காரணமாக வ்ருத்தியுபதேசிக்கும் மத்யமகுருவாகாமல், எவ்வளவு அநுவர்த்தித்தாலும் ஒன்றும் உபதேசியாத அதமகுருவுமாகாமல், தாமாகவோ அநுவ்ருத்திப்ரஸக்தர்களாகவோ உபதேசிக்குமிடத்து உயர்கதிக்குறுப்பான அர்த்தங்களையுபதேசியாதே விப்ரலிப்ஸை முதலிய காரணங்களினால் அதோகதிக்குறுப்பான அர்த்தங்களைச் சொல்லிக் கொடுக்கும் அதமாதம குருவுமாகாமல், சிஷ்யர்களின் அனர்த்தங்கண்டு அவர்களுடைய அநுவ்ருத்தி நிர்ப்பந்தங்களில்லாமலே * பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான் * என்றாப்போலே தம்முடைய பரமக்ருபையடியாகவே ஸாத்விக மஹார்த்தங்களையுபதேசித்து உத்தமகுருவாமவர். ஞானமின்றி அனுஷ்டானம் மாத்திரமுடைய மத்யமகுருவன்றிக்கே, அனுஷ்டானம் சிறிதுமின்றி ஞானம் மாத்திரமுடைய அதம குருவுமன்றிக்கே, ஞானமனுஷ்டான மிரண்டு மின்றியொழிந்த அதமாதமகுருவுமாகாமல் ஞானமனுஷ்டானமிவை நன்றாகவேயுடையராய் உத்தமகுருவாமவர். இப்படிப்பட்ட உத்தமாசார்யருடைய திருநாம ஸங்கீர்த்தனமே போதுபோக்காகவிருந்து.

[நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்] பகவத் வைபவத்திற் காட்டிலும் சிறந்ததான பாகவத வைபவத்தையும் ஆசார்ய வைபத்தையும் நன்கறிந்து அவர்களையே தஞ்சமாகக் கொண்டிருக்கிற நாங்கள் ; நம்பாவைக்குச் சாற்றி—பாவையாவது விரதம். இப்படிப்பட்ட அதிகாரிகளினுடைய விரதம் எது வென்னில், * கையில் கனியன்ன கண்ணனைக் காட்டித் தரினும் உன்றன் மெய்யில் பிறங்கிய சீரன்றி வேண்டிலன்யான் * என்கிற அமுதனார் ஸ்ரீஸூக்திப் படியே ஸித்தமான விலக்ஷணமான விரதம். சத்ருக்நாழ்வானையும் மதுரகவிகளையும் போலே இவர்கள் அஸாதாரணமாகக் கொண்ட விரதம் 'நம் பாவை' என்பதனால் குறிக்கப் படுகிறது. இதற்கு அங்கமாக, [நீராடினால்] நல்ல துறையிலே அவகாஹித்தால் என்றபடி. நம்மாழ்வார் திருவிருத்தத்தில் (93) * காலை நன்ஞானத்துறை படிந்தாடி * என்றருளிச் செய்ததை இங்கு நினைப்பது. ஸத்வோத்தரமான காலத்திலே ஸாத்விகஜ்ஞாந நிதிகளிடத்திலே அவகாஹிக்கப் பெறுகையே நீராடுகை; அது செய்தால்.

[தீங்கின்றி நாடேல்லாம்] இதுமுதலாக ஆறு அடிகளாலே (பாசுரம்முழுவதும்) நாட்டுக்கு விளையும் செல்வச்சிறப்பு விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. தேஹாநுபந்தியான செல்வச் சிறப்பு அந்யாபதேசத்தில் காண்பது. ஆத்மாநுபந்தியான செல்வச் சிறப்பு ஸ்வாபதேசத்தில் அறியத்தக்கது. அதனை அடைவே விவரிப்போம்.

[தீங்கின்றி நாடேல்லாம்] தேஹமே ஆத்மாவென்று ப்ரமித்தல், தேஹத்திற்காட்டில் வேறுபட்டவனே ஆத்மா வென்று அறியப்பெற்றும் 'அந்த ஆத்மா ஸ்வதந்திரனே யொழியப் பரதந்திரனல்லன்' என்று ப்ரமித்தல், எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருந்தல் ஆத்மஸ்வரூபம் என்றறிந்துவைத்தும், அவனுக்குப்போலவே பிறர்க்கும் அடிமைப்பட்டிருக்கலாமென்று ப்ரமித்தல், தன்னை ரக்ஷித்துக் கொள்வதில் தானே முயற்சி செய்யத் தனக்கு உரிமையுண்டென்று ப்ரமித்தல், * கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறருமான ஆபாஸபந்துக்களிடத்தே வியாமோஹம் கொள்ளுதல்......என்றிப்படிப் பல தீங்குகள் காலை நன்ஞானத்துறைபடியாதார்க்கு உண்டாகுமே ; அத்தீங்குகளெல்லாம் அடைவே தொலைந்து போம். * யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே, ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதிதுர்ப்பிக்ஷதஸ்கரா: * என்கிற ச்லோகத்திற் சொன்னபடியே தீங்குகள் தொலையும் என்றுங் கொள்ளலாம். * கொன்றுயிருண்ணும் விசாதி பகைபசிதீயனவெல்லாம் நின்றிவ்வுலகில் கடிவான் நேமிப்பிரான் தமர்போந்தார் * என்ற திருவாய்மொழிப் பாசுரத்தோடும் இது இணங்கும்.

[திங்கள் மும்மாரி பெய்து] * வேதமோதிய வேதியர்க்கோர் மழை, நீதி நன்னெறி மன்னவர்க்கோர் மழை, மாதர் மங்கையர் கற்பினுக்கோர் மழை, மாத மூன்று மழையெனப் பெய்யுமே * என்றபடி மூன்று நன்மைகளுக்காக மாதம் மூன்று மழை பெய்யுமென்று நூற்கொள்கை. இங்கு உள்ளுறை பொருளில் மழை பெய்கையாவது ஆசார்யர்களின் ஸ்ரீ ஸூக்திவர்ஷமேயாம். இதனால் வைதிகர்கள் ஸ்வாத்யாய ப்ரவசனங்களைக் குறையற நடத்திவரும்படியாகவும், மன்னவர்கள் செங்கோன்மை கெடாமல் அரசு செலுத்தும்படியாகவும், மாதர்களின் கற்புநிலை ஓங்கும்படியாகவும் நன்மைகள் நேரும் என்று தெரிவித்தபடியாம்.

அன்றியும், மும்மாரி பெய்கை—மூன்று விதமான மழை பெய்கை. முதலில் செவியிலே திருமந்த்ரோபதேசஞ் செய்கை, பிறகு க்ரந்த காலக்ஷேபம் ஸாதிக்கை, அதன் பிறகு சிந்தனை செய்விக்கை என இம்மூன்றும் மும்மாரி பெய்கையாம். திங்கள் மும்மாரி=சந்திரன் போன்று மிகக் குளிர்ந்த அர்த்தங்களைத் தருகை சொன்னபடி. * விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய் * என்ற திருநெடுந்தாண்டகப் பாசுரமுங் காண்க. * நவோநவோ பவதி ஜாயமாந: * என்ற வேதத்தின்படி சந்திரன் நவம்நவமாகத் தோன்றுபவனாதலால் அதுபோல, எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுது ஆராவமுதமான அர்த்த விசேஷங்களை வெளியிடுகையைச் சொன்னபடி.

[ஓங்கு பெருஞ் செந்நெலூடு கயலுகள] உமியோடு கூடிய அரிசி நெல்லென்று சொல்லப்படும். ஸ்தூல தேஹத்தோடு கூடிய ஜீவாத்மாவைச் சொன்னபடி. ஸ்தூல தேஹத்தின் ஸ்தானத்திலே உமியும், ஸூக்ஷ்ம தேஹத்தின் ஸ்தானத்திலே தவிடும், ஸாரபூதனான ஆத்மாவின் ஸ்தானத்திலே அரிசியும் கொள்ளப்படும். திருநாட்டிலே சென்றவாறே * அஹமந்ந மஹமந்ந மஹமந்நம் * என்று சொல்லுகிறவன் இவ்வாத்மா; இவன் ஸ்தூல தேஹத்தை இங்கே கழித்து, ஸூக்ஷ்ம தேஹத்தை விரஜையாற்றிலே கழித்து அப்ராக்ருத திவ்ய தேஹ விசிஷ்டனாய்க் கொண்டு எம்பெருமானுக்கு அன்னமாகிறான். இந்த விபூதியில் இருக்கும் வரையில் ப்ராக்ருத தேஹ விசிஷ்டனாகவே யிருப்பதால் நெல்லாகச் சொல்லப்படுவது பொருந்தும். ஞானத்தினாலும் மற்றும் பல குணங்களினாலும் ஓங்கிப் பெருமையடைய வேண்டியதுபற்றி ஓங்கு பெருஞ்செந்நெல் எனப்பட்டது. * வரம்புற்ற கதிர்ச் செந்நெல் தாள் சாய்த்துத் தலைவணக்கும் தண்ணரங்கமே * (4—9—8) என்ற பெரியாழ்வார் திருமொழியின் சுவைப் பொருள்கள் இங்கே காணத்தக்கன. செந்நெற்பயிர் முற்ற முற்ற நெறித்திருக்கமுடியாமல் தலைவணக்குவதுபோல, பாகவதர்களும் * நமந்தி ஸந்தஸ் த்ரைலோக்யாதபி லப்தும் ஸமுந்நதிம் * என்கிறபடியே தலைவணங்கி நிற்பர்கள், ஸோஹம் என்ற நிலை குலைந்து தாஸோஹம் என்றிருப்பர்களாயிற்று.

செந்நெலூடு கயல் உகளுகையாவது—கயல்—மத்ஸ்யம்; கண்ணை மத்ஸ்யமாகக் கூறுவது கவிமரபாதலால், தேஹ விசிஷ்டனான ஆத்மாவினிடத்திலே கண் செலுத்துகையைச் சொன்னபடி. இங்கிருக்கும் வரையில் நாம் தேஹத்தையும் நோக்கவேணும், ஆத்மாவையும் நோக்கவேணும். தேஹத்தை நோக்குகையாவது என்னென்னில்; வர்ணாச்ரமங்கள் தேஹத்தளவிலே நிற்பவையாதலால் * வர்ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணுராராத்யதே பந்தா நாந்யஸ் தத்தோஷகாரக: * என்கிற ப்ரமாணத்தில் ச்ரத்தையாலே வர்ணாச்ரமதர்மாநுஷ்டானங்களிலே வழுவற வர்த்திக்கையாம். ஆத்மாவை நோக்குகையாவது சேஷத்வபாரதந்த்ர்யங்கள் வளர்கிற்கை. திங்கள் மும்மாரி பெய்வதன் பலனன்றோ இவை.

[பூங்குவளைப்போதில் பொருவண்டு கண்படுப்ப] புருஷர்களின் கண்களைத் தாமரைகளாகவும் பெண்டிர்களின் கண்களைக் குவலய பலாசகவும் வருணிப்பர்கள். ஸ்த்ரீகளைத் தாமரைக் கண்ணிகளாகச் சொல்லுவதும் சில விடங்களிற் காணப்பட்டாலும் குவளையங்கண்ணியரென்பதே அவர்கட்குப் பெரும்பான்மையான வழக்கு ஆகவே இங்குப் பூங்குவளைப்போதென்று லக்ஷ்மீ கடாக்ஷத்தைச் சொல்லுகிறது. * பங்கயத்தாள் திருவருளும் கொண்டு * என்கிற ஆழ்வார் பாசுரத்தையும், * ச்ரேயோ ந ஹ்யரவிந்தலோசநமந:காந்தாப்ரஸாதாத்ருதே ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்வஸு ந்ருணாம் ஸம்பாவ்யதே கர்ஹிசித் * என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியையும் இங்கே அநுஸந்திப்பது. பொறிவண்டு, பொருவண்டு என்பன பாடபேதங்கள். முறையே, அழகியவண்டு, சண்டையிடுகிறவண்டு என்று பொருள். * உளங்கனிந்திருக்குமடியவர் தங்களுள்ளத்துளூறியதேன் * என்கிற திருமங்கையாழ்வாரருளிச்செயலின்படி தேனாகிய எம்பெருமானை யநுபவித்துக்களிக்கும் பாகவதர்களை வண்டெனப்பொருந்தும். இந்த வண்டுகள் சண்டையிடுவதாவதென்னென்னில்; * பிணங்கி அமரர்பிதற்றுங் குணம் * என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே, ஒரு திருக்குணத்தின் உயர்த்தியை ஒருவர் சொல்ல அதைக் கண்டித்து மற்றொரு திருக்குணத்தின் உயர்த்தியை மற்றொருவர் சொல்ல இப்படியாக விவாதம் வளருகை. கண்படுப்ப என்றது—நிர்விசாரமாய்க் கிடக்க என்றபடி. புருஷகார பூதையான பிராட்டியின் கடாக்ஷத்தைப் பெற்றவர்கள் நிர்விசாரமாய் மார்விலே கை வைத்துறங்கலாமிறே.

[தேங்காதே புக்குஇருந்து] தேங்குதல், தயங்குதல், தியங்குதல் இவை பர்யாய மொழிகள் ஆசார்யன் திருமாளிகையில் தயங்காமல் புக்கிருக்க வேண்டும். * நாஸம்வத்ஸரவாஸிநே ப்ரப்ரூயாத் * ஆகையாலே வருஷக்கணக்காக வாஸஞ் செய்வதிலும், * தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா * என்று கீதாசார்யன் விதித்த கட்டளைகளை நிறைவேற்றுவதிலும் தயங்காமல் காத்திருக்க வேணும்.

[சீர்த்த முலைபற்றி வாங்க] பசுக்கள் நான்கு முலைக் கண்களாலும் பால்சுரக்கும்; அதுபோல ஆசாரியர்கள் நான்கு ஹேதுக்களாலே சீரிய பொருள்களைச் சுரப்பர்கள்; (1) எம்பெருமான் இவர்களை இந்நிலத்திற்கனுப்பியது சிஷ்யோஜ்ஜீவனத்திற்கேயாதலால் பகவதாஜ்ஞாபரிபாலனமென்னும் நினைவு. (2) சிஷ்யர்கள் வருந்தி வேண்டிக் கொள்ளுதல் (3) அவர்கள் வேண்டிக்கொள்ளாவிடினும் அவர்களது துர்க்கதிகண்டு ஸஹிக்கமாட்டாமை. (4) தாங்கள் வாய்விட்டுச் சொல்லாதொழியில் தரிக்க முடியாமை—ஆகிய இப்படிப்பட்ட நான்கு ஹேதுக்களாலும் ப்ரவசனம் செய்யவேண்டியவர்களாதலால் இவை சீர்த்த முலையாகச் சொல்லப்பொருத்தமுண்டு.

[பற்றிவாங்கக் குடம்நிறைக்கும்] அர்ஜுநன் * சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம் * என்று ஒரு சொல் சொல்லி ப்ரார்த்தித்தவாறே அத்யாயமத்யாயமாகக் கறந்த கீதாசார்யனைப்போலவும், * நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முனிபுங்கவம் * என்கிறபடியே வான்மீகி முனிவர் கேட்டவாறே ஸ்ரீராமாயணார்த்தத்தைக் கறந்த நாரத மஹர்ஷிபோலவும், * மைத்ரேய: பரிபப்ரச்ச ப்ரணிபத்யாபிவாத்ய ச * என்கிறபடியே மைத்ரேயர் கேட்டவாறே சிதசிதீச்வரதத்ஸ்வபாவ போகாபவர்க்கததுபாய கதிகளைக் கறந்த பராசரபகவான் போலவும், ஹிதமருளிச் செய்யவேணுமென்று பிரார்த்தித்தவாறே * கடல்வாய்ச் சென்று மேகங்கவிழ்ந்திறங்கிக் கதுவாய்பட நீர்முகந்தேறி யெங்குங் குடவாய்படநின்று மழைபொழியும் * என்றாற்போலே தாரைதாரையாக வர்ஷித்துக் குடங்குடமாக நிறைப்பர்களாம் மஹாசார்யர்கள். குடம் என்றது பாத்ரமென்றபடியாய் ஆசார்யதயாபாத்ரபூதர்களான

ஸச்சிஷ்யர்களைச் சொன்னபடி. இவர்களை நிறைக்கையாவது— * குணதுங்கதயா தவ ஸ்ங்கபதே ப்ரசுரிப்ரமிமம் ஜநமுந்நமய * என்று பட்டரும், * அமீஷாம் நிகத்ரம் வ்ருஷகிரிபதேருந்நதிமபி ப்ரபூதைஸ் ஸ்தோத்ரைபி: ப்ரஸபமநுகம்பே ஸமயஸி * (தயாசதகே) என்று தேசிகனும் பணித்தபடியே தம்மோடொக்க வருள்செய்கை. இப்படி நிறைப்பவர்கள் யாரென்னில்;

[வள்ளல்பெரும்பசுக்கள்] கைம்மாறு கருதாமல் மஹார்த்தங்களையருளிச் செய்கையாலே மஹோதாரர்களாய், * கவாமங்கேஷு திஷ்டந்தி புவநாநி சதுர்தச * என்கிறபடியே பதினான்கு லோகங்களையும் தம்முட்கொண்டிருக்கும் பசுக்களைப்போலே பதினான்கு வித்யைகளையும் தம்முள் தரித்திருப்பவர்களாய், பஞ்சகவ்யம் போன்ற அர்த்த பஞ்சகத்தினாலே ஸகலாத்மாக்களையும் புனிதராக்குமவர்களான மஹாசார்யர்கள். இவர்களாலே, நீங்காத செல்வம் நிறைந்து—அத்யாத்ம வித்யையும் அதன் பலனான பக்தியும் ஒருநாளும் குறையாமே மேன்மேலும் பெருகிச் செல்லும் என்றபடி. நிறைந்த என்றது-நிறைந்திடும் என்றவாறு. உலகத்தார் செல்வமென்று நினைத்திருக்குமது உபாதிவிசேஷங்களாலே நீங்குமது; மேற்சொன்ன செல்வமே நீங்காததாகும். அப்பயதீக்ஷிதர் குவலயானந்தத்திற்கு இயற்றியுள்ள மங்களச்லோகம்—* உத்காட்ய யோககலயா ஹ்ருதயாப்ஜகோசம் தந்யைச் சிராதபி யதாருசி க்ருஹ்யமாண:, ய: ப்ரஸ்புரதி அவிரதம் பரிபூர்ணரூப: ச்ரேயஸ் ஸ மே திசது சாச்வதிகம் முகுந்த:* என்பது; இதில் எம்பெருமானே நீங்காத செல்வமாக நிரூபிக்கப்பட்டுளன். இங்ஙனேயுங் கொள்ளத் தகும். .... .... .... *

இனி, (21) * ஏற்றகலங்கள் பாசுரத்தின் விசேஷார்த்தம் வரையப்படுகின்றது. * ஏற்ற கலங்களேதிர்பொங்கி மீதளிப்ப மாற்றாதே பால்சோரியும் வள்ளல்பெரும்பசுக்களாற்றப் படைத்தான் மகனே! என்று கண்ணபிரான் அழைக்கப்படுவதாக அந்யாபதேசார்த்தம். சுரந்தபாலை ஏற்றுக் கொள்வதற்காக ஏந்தப்பட்ட கலங்களானவை ஒரு க்ஷணத்தில் நிறைந்து எதிரேபொங்கி மேலே வழியும்படியாக இடைவிடாமல் பாலைச் சுரக்கின்ற வள்ளல் பெரும்பசுக்களை விசேஷமாகப் படைத்துள்ள நந்தகோபனுடைய குமாரனே! என்பது பொருள். ஸ்வாபதேசத்திலோ வென்னில்; சிஷ்யலக்ஷணஸம்பந்நர்களான ஸச்சிஷ்யர்கள் "இவர்கள் ஆசிரியர்களிற் காட்டிலும் மேம்பட்டவர்கள்" என்று நாடு புகழும்படியான சிறந்தயோக்யதை பெறுமாறு பால்போன்ற மஹார்த்தங்களை நிரந்தரமாக வர்ஷிக்கின்ற ஆசிரியர்கள் பலரையுண்டாக்கின வொரு மஹாசார்யரை ஆற்றப்படைத்தானென்பதனாற் சொல்லி, அவரிடத்திலே ஸர்வாத்மநா விதேயராயிருக்கின்றவொரு உத்தம சிஷ்யரை மகனே! என்று விளிக்கிறபடி. ஆழ்வான் ஆண்டான் எம்பார் பிள்ளான் முதலானவர்கள் ஆசார்யாதிசாயிப்ரபாவசாலிகளாகையாலே அவர்கள் எதிர்பொங்கி மீதளிக்கும் ஏற்ற கலங்களாகக் கருதத் தக்கவர்கள். இவர்கள் இப்படிப்பட்டவர்களாம்படி மாற்றாதே பால் சொரிகின்ற வள்ளல் பெரும்பசுக்கள்—ஸ்வாமியெம்பெருமானாரேயாவர். (பூஜாயாம் பஹுவசநம்.) வள்ளல்பெரும்பசுக்களாற்றப்படைத்தவர் ஆளவந்தார் என்று கொள்வது. அவர்க்கு மகன்போன்றிருந்த பெரியநம்பி திருமலைநம்பி திருக்கோட்டியூர் நம்பி திருமாலையாண்டான் முதலானவர்களிலொருவர், மகனே! என்று அழைக்கப்படுகிறார்.

அன்றிக்கே, எதிர்பொங்கி மீதளிக்கும் ஏற்றகலம்—ஸ்வாமி யெம்பெருமானார். இவர் பஞ்சாசார்ய பதாச்ரிதராகையாலே பெரியநம்பிமுதலான அந்த ஆசாரியர்கள் மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள். அப்பசுக்களை ஆற்றப்படைத்தான்—ஆளவந்தார்; அவர்க்கு மகனாக எம்பெருமானாரே கொள்ளத்தகுவர். இதுவும் மிகப் பொருத்தமான நிர்வாஹமென்க.

ஏற்ற கலங்கள் = ஆசார்யன் உபதேசித்தருளும் அர்த்த விசேஷங்களை * அறிவித்தேன் ஆழ் பொருளைச் சிந்தாமல் கொண்மினீர் தேர்ந்து * என்று திருமழிசைப்பிரான் கூறின படியே சிந்தாமல் கொள்ளவல்ல பாத்திரங்கள் சிஷ்யர்களாதலால் அவர்களே கலங்கள் என்பதனால் விவக்ஷிதர்கள். ஏற்ற கலங்கள் என்றது—ஆசார்யனுக்கு ஏற்ற சிஷ்யர்கள் என்றபடி. வேதாந்த தேசிகன் ந்யாஸவிம்சதியில் * ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே * என்கிற ச்லோகத்தினால் ஆசார்யலக்ஷணத்தையும், * ஸத்புத்திஸ் ஸாதுஸேவீ * என்கிற ச்லோகத்தினால் சிஷ்ய லக்ஷணத்தையும் அருளிச் செய்தார். அப்படி ஸதாசார்ய லக்ஷணம் வாய்ந்த குருக்களுக்கு ஏற்றவாறு ஸச்சிஷ்ய லக்ஷணம் வாய்ந்தவர்களாய்க் கொண்டு வந்து சேர்ந்த அந்தேவாஸிகளை இங்கு ஏற்ற கலங்கள் என்கிறது. தைத்திரீய ஆரண்யகத்தில் * நைவம் விதுஷே அயஜ்ஞோ வாஸினே । ஸநேத்ராநத்வை ஊ ஹரதாமு । யோ ஊ ஹரதி । ஸ ப்ரவ்ருஷே ஸமஸ்ராஷ்கராக * என்று ஓதப்பட்டிருப்பதை நன்கறிந்து ஆசார்யர் வர்த்திக்க, அதற்குச் சார்பாக வர்த்திக்கும் சிஷ்யர்களே ஏற்றகலங்கள்.

எதிர்பொங்கி மீதளிப்ப—* புத்ராதிச்சேத் பராஜயம் * என்றும் * சிஷ்யாதிச்சேத் பராஜயம் * என்றும் சொல்லுவர்கள். தகப்பனார் தம் மகனிடத்தில் தோல்வியடைய விரும்பவேண்டும்; ஆசாரியர் தம் சிஷ்யனிடத்தில் தோல்வியடைய விரும்பவேண்டும். அதாவது—ஆசாரியன் தன்னைக்காட்டிலும் மிக வல்லவனாய் தனக்கும் அறிவூட்ட வல்லவனை சிஷ்யனைப்பெற்று அஸூயைப்படாதே மிகவும் மகிழ்ந்திடுவன் என்றவாறு. எம்பெருமானார், திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்கும்போது, ஆளவந்தார் திருவுள்ளத்திலிருந்த அர்த்த விசேஷங்களைத் தாம் அறியப்பெற்று அவ்வாசிரியர்க்கும் உணர்த்தினரென்பது ப்ரஸித்தம். கூரத்தாழ்வான் போதாயன வ்ருத்திக்ரந்தத்தையெல்லாம் திருவுள்ளத்தில் தேக்கிக் கொண்டிருந்து ஸ்வாமி தாமும் விஸ்மயப்படும்படியான மேதா ப்ரதிபாவிலாஸ சாலியாயிருந்தாரென்பது ப்ரஸித்தம். பட்டரை அதிசயித்து நஞ்சீயரும், நஞ்சீயரை யதிசயித்து நம்பிள்ளையும் ஞான நிதிகளாக விளங்கினார்களன்றோ. இவர்களெல்லாரும் பல்பல விசேஷங்களிலே ஸ்வாசார்யர்களுக்கும் உத்போதநம் பண்ணி * வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே * என்ற திருநெடுந்தாண்டகப் பாசுரத்திற்கு இலக்கியமாக விளங்கினார்களென்பது பலபல ஐதிஹ்யங்களினால் விளங்குகின்றது. ஏற்றகலங்கள் எதிர்பொங்கி மீதளிக்குந்தன்மை இதுவேயாம்.

மாற்றதேபால் சோரியும் = மேலே விவரித்த விதமான அதிசயத்தை சிஷ்யர்கள் பெறும்படியாக ஆசாரியர்கள் செய்வது இதுவே. * உனது பாலே போல் சீரில் பழுத்தொழிந்தேன் * (பெரிய திருவந்தாதி.) என்று ஆழ்வார் பகவத் குணங்களைப் பாலாகப் பேசியிருக்கையாலே, பால் சோரியுமென்றது—பகவத் குணங்களைத் தாரை தாரையாக வர்ஷிக்கும்படியைச் சொன்னவாறு. மாற்றதே யென்பதற்குப் பல படியாகப் பொருள் கொள்ளலாம் ; * முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசுவதே முறைமையாயிருக்க, அந்த முறையைத் தவிர்ந்து அவர்கள் அருளிய பொருள்களை மாற்றுவர்கள் பலர் ; அப்படி மாற்றாதே, * பகவத் போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்ம ஸூத்ர வ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு: ; தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே *. என்று ஸ்ரீ பாஷ்யகாரரும், * எந்தை திருவாய்மொழிப்பிள்ளையின்னருளால் வந்த வுபதேச மார்க்கத்தைச் சிந்தை செய்து * என்று மணவாளமாமுனிகளும் அருளிச் செய்தபடியே முன்னோர் வழியை மாற்றாமல் என்பது முதற்பொருள்.

ஒரு வ்யவஸ்தையிலே நின்று பேசாதவர்கள் தம் நெஞ்சில் தோன்றினபடியே இன்று ஒரு பொருளைச் சொல்லி, மறுநாள் அதில் அநுபபத்தியைத் தாமே கண்டு 'நேற்று தவறுதலாகச் சொல்லிவிட்டேன்; அதைக் கொள்ளவேண்டா; இன்று உள்ளவாறு சொல்லுகிறேன், இதைக் கொள்ளுங்கள்' என்பது; மறுநாள் அதையும் தாமே மறுத்து மற்றொரு பொருள் சொல்லுவது—என்றிப்படி தம் உக்திகளைத் தாமே மாற்றுவர்களே பலர்; அப்படியல்லாமல், நிஷ்க்ருஷ்டமான பொருளை நிலைகுலையாமே சொல்லி—என்பது இரண்டாவது பொருள்.

தாம் உரைத்த பொருளிலே மற்றொருவர் அநுபபத்திகளை எடுத்துரைத்து அது தவறென்று கண்டித்து வேறொரு பொருள் சொல்லவேண்டாதபடி; எல்லாரும் இப்பொருளையே ஆதரிக்கவேண்டும்படி—என்பது மூன்றாவது பொருள். இப்பொருளில், மாற்றாதேயென்றது மாற்றவேண்டாதே யென்றபடி.

பஹுச்ருதத்வஸித்திக்காகவும் மற்றோராசிரியரிடத்தில் போகவேண்டாமல் * யஸ்மாதேவ மயா ஸர்வம் சாஸ்த்ரமக்ராஹி நாங்யத: * என்று நயனாசார்யர் பணித்தபடியே ஸகலார்த்தங்களையும் ஒருவர் தாமே உபதேசிக்கும்படியையும் மாற்றாதே யென்பது சொல்லும். 'ஆசார்யரை மாற்றவேண்டாதபடி' என்கை. இது நான்காவது பொருள்.

மாற்றாதே—ஏமாற்றாதே; மானிடர்க்குரிய தோஷங்களான ப்ரமம் ப்ரமாதம் முதலியவற்றில் விப்ரலிப்ஸை என்பது மொன்று; அதாவது வஞ்சிக்கவேணு மென்கிற இச்சை; பொய்யான ப்ரமாணங்களையும் தப்பான பொருள்களையும் சொல்லி வஞ்சிக்க நினையாதே என்றபடி. இது ஐந்தாவது பொருள். இடை விடாமல் என்பது மொன்று. * ஸததம் கீர்த்தயந்தோ மாம் * என்று கீதாசார்யன் சொன்னபடியே. ஆக ஆறு பொருள்கள்.

பால் சோரியும்—வெண்ணிறமாயிருக்கும் பால்; அதுபோல சுத்தமான அர்த்தங்களைப் பொழிவர்கள். பிறந்தநாள் தொடங்கி இறக்கும் நாள்வரையில் பால் உபஜீவ்யமாகும்; அதுபோல. * அன்றுநான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன் * என்கிறபடியே ஸத்தை பெற்றநாள் முதலாக யாவதாத்மபாவி உபஜீவ்யங்களாம் ஆசாரியன் அருளும் அர்த்த விசேஷங்கள். கன்றைக்கண்டாலல்லது பால் சுரவாது. சிஷ்யர்களைக் கண்டாலல்லது ஆசாரியர்களுக்கு அர்த்தம் ஸ்புரிக்கமாட்டாது. பாத்திரத்தில் ஏந்திவைக்கப்படுகிற பாலே பலர்க்கும் பயன்படும்; ஏடுகளில் எழுதிவைக்கப்படுகிற அர்த்த விசேஷங்களே பின்னுள்ளார் பலர்க்கும் பயன்படும். நம்பிள்ளைபோல்வார் உபந்யஸித்தருளின அர்த்த விசேஷங்கள் வடக்குத் திருவீதிப்பிள்ளை போல்வாரால் ஏடுபடுத்தப்படவேயன்றோ இன்று நம்போல்வாரும் பருகிக் களிக்கப்ராப்தமாகிறது. ஆக இவ்வகைப் பொருத்தங்களாலே அர்த்த விசேஷங்கள் பாலென்னத்தகும். மிகவும் சிரமப்பட்டு ஆலோசித்து ஒன்றிரண்டு அர்த்தங்களைச் சொல்லுவாருமுண்டே; அப்படியன்றிக்கே திருமலையருவிபோலே பொழிவர்களென்கிறது சோரியும் என்பதனால்.

வள்ளல் பெரும்பசுக்கள்—"உதார: ஸந்தர்சயந் நிரமிமீத புராணரத்நம்" என்று ஆளவந்தார் பராசர மஹர்ஷியை வள்ளலென்றார்; * த்வாம் ஹி ச்ரிய: ச்ரியமுதாஹுருதாரவாச: * என்று கூரத்தாழ்வான் திருமங்கையாழ்வாரை வள்ளலென்றார். கைம்மாறு கருதாமல் இப்படி ஸ்ரீஸூக்தி ரத்னங்களை வழங்குமாசிரியர்களே வள்ளல்கள்.

[பெரும்பசுக்கள்] பசுக்களும் மிருகஜாதியாயிருக்கச் செய்தேயும் மற்றமிருகங்கள் கொலையுங் கொடுமையுமே இயல்வாயிருக்க, பசுக்கள்மாத்திரமே பாலையும் தயிரையும் வெண்ணெயையும் சுரந்து உலகத்தையெல்லாம் உகப்பிப்பதுபோல, ஆசார்யர்களும்

மநுஷ்யஜாதியாயிருக்கச் செய்தேயும் மற்ற மநுஷ்யர்கள் மனிதவுருக்கொண்ட நாற்கால் விலங்குக ளென்னும்படியாயிருக்க இவர்கள் மாத்திரமே அம்ருதகல்பமான அர்த்தங்களை வர்ஷித்து உலகத்தை வாழ்விக்கையாலும், இத்தன்மையிலே எம்பெருமானைக்காட்டிலும் பெருமை பெற்றிருக்கையாலும் பெரும்பசுக்க ளென்னப் பொருந்தும். பசுக்கள் தின்பது எதுவாயிருந்தாலும் மதுரமான பாலே வெளிவரும்; அதுபோல, ஆசாரியர்கள் நாமுண்ணு மவற்றையே உண்பவர்களாயிருந்தாலும் அமுதினுமாற்றவினிய ஸ்ரீஸூக்திகளே அவர்களது திருப்பவளத்தினின்று வெளிவரும். பசுக்கள் நான்கு முலைகளினின்றும் பாலைத் தருவதுபோல, ஆசாரியர்களும் க்ரந்த சதுஷ்டயம் என்று ப்ரஸித்தமாகச் சொல்லுகிற நான்கு க்ரந்தங்களினின்றும் திவ்யார்த்தங்களைத் தந்தருள்வர்கள். (க்ரந்த சதுஷ்டயமாவது—ஸ்ரீபாஷ்யம், கீதாபாஷ்யம், பகவத்விஷயம, ரஹஸ்யம்.) பசுக்கள் க்ருஹத்தில் கடைசியான ஸ்தானத்தில் வாழ்வதுபோல ஆசாரியர்களும் * ஸப்தபர்வவ்யவதாநதுங்காம் சேஷத்வகாஷ்டாம் * என்று பாதுகாஸஹஸ்ரத்திற் பணித்தபடியே * அடியாரடியார்தம்மடியாரடியார் தமக்கடியாரடியார்தம் அடியாரடியோங்களே * என்றும் * த்வத்ப்ருத்யப்ருத்ய பரிசாரக ப்ருத்யப்ருத்யப்ருத்யஸ்ய ப்ருத்ய: * என்றும், * த்வத்தாஸதாஸகணநா சரமாவதௌ யஸ் தத்தாஸதைகரஸதா அவிரதா மமாஸ்து * என்றும் எல்லைநிலமான நிகர்ஷத்தை யநுஸந்தித்திருப்பர்கள்.

முமூர்ஷுதசையிலே பசுதானம் சிறக்கும்; அப்படியே தர்மதேவதையின் முமூர்ஷுதசையிலே ஆசார்யர்களாகிற வள்ளல் பெரும்பசுக்கள் எம்பெருமானாலே தானஞ் செய்யப்படுகிறார்கள். இவ்விஷயம் கீதையில் நான்காமத்யாயத்திலே ஸூசிதம்; எங்ஙனே யென்னில்; * யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத, அப்யுத்தாநமதர்மஸ்ய ததா ஆத்மாநம் ஸ்ருஜாம்யஹம் * என்பது கீதாசார்யனுடைய அருள்மொழி; இதில் 'ஆத்மாநம் ஸ்ருஜாமி' என்றதில் உபதேசபரம்பரையிலே கேட்டறியவேண்டிய ரஹஸ்யார்த்தமுண்டு. அந்த கீதையிலேயே ஏழாமத்யாயத்தில் * ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம் * என்று சொல்லி யிருக்கையாலே ஆத்மாநம் ஸ்ருஜாமி யென்றது ஞானிகளையுண்டாக்கித் தருகிறேனென்றபடி. அவர்களை எப்போது தருகிறானென்னில், (யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி, ததா) தர்ம தேவதை முமூர்ஷுவாயிருக்குங் காலத்திலே யென்றபடி.

ஆக இத்தகைய பல பொருத்தங்களினாலே வள்ளல் பெரும்பசுக்களென்னத் தகுந்தவர்கள் ஆசார்யபதவியை வஹிப்பதற்கு முன்பு நெடுங்காலம் சிஷ்யபதவியிலே வாழ்ந்தவர்களாதலால், இவர்களைப் படைத்தான் என்று ஒரு மஹாசாரியர் விவக்ஷிக்கப்படுகிறார். ஆளவந்தார் 'ஆம் முதல்வன்' என்று எம்பெருமானாரைக் கடாக்ஷித்தருளி அவர் வழியாகப் பலபல வள்ளல் பெரும்பசுக்களைப் படைத்தாராதலால் அவ்வாளவந்தார் இங்கு 'ஆற்றப் படைத்தான்' என்பதனால் கொள்ளப்படலாம். அவருடைய மகனாக ஒரு ஆசாரியரைக் கொள்ளுவது. இப்பாசுரத்தில் நான்கு தலைமுறை காட்டப்பட்டுள்ளது; ஏற்றகலங்க ளென்பது ஒரு தலைமுறை. வள்ளல் பெரும்பசுக்கள் என்பது ஒரு தலைமுறை. ஆற்றப் படைத்தானென்பது ஒரு தலைமுறை. மகனே யென்பது ஒரு தலைமுறை. இதனால், * யஸ்ய வேதச்ச வேதீ ச விச்சித்யேதே த்ரிபூருஷம், ஸ வை துர்ப்ராஹ்மணோ ஜ்ஞேயஸ் ஸர்வகர்மபஹிஷ்க்ருத: * என்னும் பழிப்பில்லாத ப்ரபந்நஜநஸந்தாநசுத்தி காட்டப்பட்ட தென்றுணர்க.

•அறிவுறாய்—பிறவினையில் வந்த தன் வினை; அறிவுறுத்தாய் என்றபடி. அடியோங்களுக்கு உபதேசங்கள் தந்து அறிவை வளர்த்தவேணு மென்றபடி. அடியோங்களைத் திருவுள்ளத்திலே கொண்டருளவேணும் என்று பிரார்த்திக்கிறபடியாகவுமாம்.

[ஊற்றமுடையாய்] உறுதியான ப்ரமாணத்தினுல் ஸித்திப்பவரே! என்றபடி. * ஆசார்யவாந் புருஷோ வேத * என்றும் * பாபிஷ்ட: க்ஷத்ரபந்துச் ச புண்டரீகச் ச புண்யக்ருத், ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாத் ஆசார்யவாந் பவேத் * என்றுமுள்ள ப்ரமாணங்கள் இங்குக் காண்க. ஸதா ஸர்வதா சிஷ்யர்களை வாழ்விப்பதிலேயே ஊற்றமுள்ளவரே! என்னவுமாம்.

[பெரியாய்!] * புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீ யென் செவியின் வழிபுகுந்து என்னுள்ளாய்,—அவிவின்றி, யான் பெரியன், நீ பெரியை யென்பதனை யாரறிவார், ஊன் பருகு நேமியாயுள்ளு * என்கிற பெரிய திருவந்தாதிப் பாசுரப்படியே எம்பெருமானிலும் பெரியவரே! என்றபடி. உபய விபூதி நாதனுன எம்பெருமானையும் தம்முள்ளே அடக்கிக் கொண்டிருக்குமவர் எம்பெருமானிற் காட்டிலும் பெரியவராகத் தானே யிருக்கவேண்டும்.

[உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே!] * ப்ராதுர்ப்பாவைஸ் ஸுரநரஸமோ தேவ தேவஸ் ததீய: * என்கிற ப்ரமாண வசனத்தையுட்கொண்டு இது அருளிச் செய்கிறபடி. எம்பெருமான் பலபல யோனிகளிலும் தோன்றினும் * ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாந: * என்கிற சுருதியின்படியே தன்னுடைய தேஜஸ்ஸு சிறிதும் குன்றமல் மேன்மேலும் கொழுந்துவிட்டொளிருமாபோலே அப்பெருமானடியார்களும் பல பல யோனிகளிற் பிறவா நின்றாலும் அவர்களது குலம் தொண்டக்குலமேயாய் ஒளிமழுங்காதே விளக்க முற்றேயிருப்பர்கள் என்பது மேலெடுத்த ப்ரமாணவசனத்தின் கருத்து. ஆகவே உலகினில் தோற்றமாய் நின்றசுடரே! என்றவிளி பகவானுக்குப் போலவே பாகவதர்களுக்கும் மிகப் பொருந்தும்.

[துயிலெழாய்] * அநாதிமாயயா ஸுப்த: * என்றிருக்கு மெங்களைத் துயிலெழுப்ப வேணும் என்கை. தேவரீர் திருக்கண்விழித்து அடியோங்களைக் கடாக்ஷித்தருளவேணு மென்றதாகவுமாம். இப்படிப்பட்ட பாகவதோத்தமர்களின் திருமாளிகைக்குத் தாங்கள் வந்து சேர்ந்தபடியை த்ருஷ்டாந்த பூர்வகமாகப் பேசுகிறார்கள் மேல் மூன்றடிகளினுல்.

[மாற்றாருனக்கு வலி தொலைந்து இத்யாதி.] மாற்றார்—மாறுபாடுகொண்டவர்கள்; பகைவர்களென்றபடி. ப்ரமாணங்களையும் ப்ரமேயங்களையும் ப்ரமாதாக்களையும் தூஷித்துக் கொண்டு வேறுபட்டிருந்த மதாந்தரஸ்தர்கள் இங்கு மாற்றார் எனப்படுகிறார்கள். அவர்கள் வந்து வாதஞ்செய்து வலிமாண்டு அடி பணிந்தார்களென்பது ஆளவந்தார் எம்பெருமானார் பட்டர் நம்பிள்ளைபோல்வாருடைய சரிதைகளிலே விசதம். யாவத ப்ரகாசர் யஜ்ஞமூர்த்தி முதலானர் எம்பெருமானர் திருவடிகளிலே வலிதொலைந்துவந்து அடிபணிந்தவர்கள். * தஞ்சீரை ஞானியர்கள் தாம் புகழும் வேதாந்திகள் அஞ்சியராகி பட்டர் திருவடிகளிலே வந்து பணிந்ததும், துன்னுபுகழ்க் கந்தாடைத் தோழப்பர் நடுவில்திருவீதிப்பிள்ளை பட்டர் முதலானர் நம்பிள்ளை திருவடிகளிலே வந்து பணிந்ததும் ப்ரஸித்தம். அவரவர்கள் குணங்களுக்குத் தோற்றுப் போற்றிப் புகழ்ந்துகொண்டு வந்து புகுந்ததுபோல அடியோங்களும் வந்து புகுந்தோம், எம்மையும் ஆட்கொண்டருளவேணும்—என்று வேண்டிக்கொள்ளுகிற படி. அத்வேஷிகளாகவும் அநுகூலர்களாகவுமிருந்தவர்கள் வந்து பணிவதிற்காட்டிலும் த்வேஷிகளாயிருந்தவர்கள் மாச்சரியம் நீங்கி வந்து பணிவது விசேஷமாதலால் அஃது இங்கெடுத்துப் பேசப்பட்டது.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

# காளிதாஸ க்ரந்த மாலை.

நாம் பகவத் ராமாநுஜ க்ரந்தமாலை, வேதாந்த தேசிக க்ரந்தமாலை, வரவர முநீந்த்ர க்ரந்தமாலை யென்றிப்படி பூர்வாசார்ய க்ரந்தமாலைகளை வெளியிட்டது போல காளிதாஸர்பவபூதி முதலான மஹாகவிகளின் க்ரந்தங்களையும் பலமாலைகளாக வெளியிட விரும்பி முதலில் காளிதாஸ க்ரந்தமாலையை அச்சிடத் தொடங்கினேம். உலகம் பரவிய தேவநாகர லிபியில் அச்சிடத் தொடங்கினபடியால் நாம் நினைத்தபடி வேலை துரிதமாக நடைபெறவில்லை. காளிதாஸர் இயற்றிய ரகுவம்சம், மேகஸந்தேசம், குமார ஸம்பவம், அபிஜ்ஞாந சாகுந்தலம், மாலவிகாக்நிமித்ரம், விக்ரமோர்வசீயம் என்னும் க்ரந்தங்களை யெல்லாம் அச்சிட்டு முடித்துக் **காளிதாஸ க்ரந்த மாலா** என்று வெளியிட ஆவல் கொண்டிருந்தோம். அச்சுக்கூடத்தில் எதிர்பாராதபடி நேர்ந்த சிரமதத்தினால் ரகுவம்ச மஹா காவியம் ஒன்று மாத்திரமே இப்போது அச்சு முடிவு பெற்றிருக்கின்றது. முதலில் இதனை வெளியிட்டுவிட்டு, பிறகு மற்ற காவியங்களையும் நாடகங்களையும் அச்சிட்டு வெளியிடலாமென்று தோன்றினபடியால் பூர்த்தியான ரகுவம்ச மஹா காவியம் (மூலமாத்ரம்) இப்போது வெளியிடப்பட்டுள்ளது. இது காளிதாஸ க்ரந்தமாலையின் முதல் மலராகும்.

பதிப்பாசிரியர், P. B. அண்ணங்கராசாரியர்.

**இதன் விலை 1—8—0.**

**கிடைக்குமிடம் :—**

**க்ரந்தமாலா ஆபீஸ்,**

**காஞ்சீபுரம்.**